உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
சைவமும் தமிழும் தழைத்தினி தோங்குக

# சைவர் யார்?

சிவஸ்ரீ தத்புருஷ தேசிகரவர்கள்
எழுதியது






வெளியீடு:
இரண்டாவது மாநிலச் சிவபூசை மாநாடு
ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரேசுவரர் திருக்கோயில்
மதுரை-1 1—1—1981

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
சைவமும் தமிழும் தழைத்தினி தோங்குக

1/6

# சைவர் யார்?

## சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர் அவர்கள்
எழுதியது






வெளியீடு:
**இரண்டாவது மாநிலச் சிவபூசை மாநாடு**
ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரேசுவரர் திருக்கோயில்
**மதுரை-1 1-1-1981**

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# பதிப்புரை

எல்லாம் வல்ல ஸ்ரீ மீனுக்ஷி அம்மையார் உடனுகிய சொக்கலிங்கப் பெருமான் திருவருளால் நமது சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர் சைவநெறிக் கழகத்தின் இரண்டாவது மாநிலச் சிவபூசை மாநாடு, நம் குருநாதர் **சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர்** அவர்களின் 67வது திருவவதார நாளாகிய (மார்கழிச் சுவாதி), இன்று பூலோக கயிலாயமாகிய மதுரைத் திருத்தலத்தில் நடைபெறுகிறது. இது இங்கே சிறப்பாக நிகழப், பல்லாற்ருனும் உதவி புரிந்த வரவேற்புக் குழுவினர்க்கும், குறிப்பாக இக்குழுத் தலைவரும், ஸ்ரீ மீனுக்ஷி சுந்தரேசுவரர் திருக்கோயில் அறங்காவலர் குழுத்தலைவருமாகிய திரு. வ. நா. சிதம்பரம் செட்டியாரவர்களுக்கும் எங்கள் கழகம் பாராட்டுதலையும், நன்றியறிதலையும் தெரிவித்துக் கொள்ளுகிறது.

சென்ற ஆண்டில் திருவானைக்காவலில் நிகழ்ந்த முதலாவது மாநிலச் சிவபூசை மாநாட்டில் சிவபூசையில் ஓத வேண்டிய திருமுறைப் பாடல்

களைத் தொகுத்து வெளியிட்டோம். இவ்வாண்டில் **"சைவர் யார்?"** என்ற இந்தநூல் வெளிவருகிறது. வாழ்நாள் முழுவதையும் சைவப் பணிக்கே என்று கொண்டு, இளமை தொட்டு விரிவுரைகளாற்றியும், நூல்கள் வெளியிட்டும், சமய, விசேட நிருவாண தீக்ஷைகளையும், ஆசாரியாபிஷேகத்தையும் சிவாகம ஞானபானுவாக விளங்கிய சிவஸ்ரீ ஈசான சிவாசாரிய சுவாமிகளிடத்தில் பெற்று, இதுவரை ஏறக்குறைய இரண்டாயிரம் அன்பர்களுக்குச் சிவ தீட்சை செய்து வைத்துச், சைவநெறியும், ஒழுக்கமும் நிலை நிற்கும்படி செய்தும் வருகின்ற நம் குருநாதரவர்கள், எங்கள் வேண்டுகோளை ஏற்று, இந்த நூலை எழுதியிருக்கிறார்கள். மேலும் **"சிவபூசா விதியும் விளக்கங்களும்"** என்ற விரிவான நூல் ஒன்று சிவாகமங்கள், சைவப்பத்ததிகள், சாத்திர தோத்திரங்களின் ஆதாரங்களுடன் ஐயா அவர்களால் எழுதப் பெற்று வருகிறது. அடுத்த ஆண்டில் இந்தஅரிய பெரிய நூல் வெளியீடுநிகழத் திருவருள் துணை செய்யும்.

நம் குருநாதர் அவர்களுக்கு எங்கள் மன மொழி மெய்களாலான வணக்கத்தைப் புலப்படுத்திக்கொள்ளுகிறோம்.

அன்புள்ள,

வயிநாகரம். சோம. கருப்பன் செட்டியார். தலைவர்
ப. மூக்கப்பிள்ளை, துணைத் தலைவர்.
ப. சுப்பிரமணிய பிள்ளை, செயலாளர்.
வை. கி. செல்லமணி, துணைச் செயலாளர்.
தைலா கோபால், பொருளாளர்.

மற்றும் செயற்குழு உறுப்பினர்களும், பொதுக் குழு உறுப்பினர்களும்.

சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர் சைவ நெறிக் கழகம்,

செயலகம்: 50, வீரமாநகரம்,
தாராநல்லூர், திருச்சி-8.
1-1-1981

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

சைவமும் தமிழும் தழைத்தினிதோங்குக

# சைவர் யார்?

**பதியும் பசுவும்:-**

பரம கருணாநிதியாகிய சிவபெருமான் என்றும் உள்ளவராய், எங்கும் நிறைந்தவராய், இயல்பாகவே பாசங்களின் நீங்கியவராய், எல்லாம் அறிபவராய் எல்லாம் செய்பவராய், என்றும் மகிழ்ச்சியும், தம் வயமுமுடையவராய்ப், பேரருளுடையவராய் இருப்பவர், இதனால் ஒப்புவமையில்லாத ஒரே பதிப்பொருள் அவர் என்பது உணரப் பெறும். உயிர்கள் என்றும் உள்ளவைகளாய்ச் சிறுபான்மை நிறைவை உடையனவாய், சிற்றறிவும், சிறுதொழிலும் அமைந்தனவாய், பாசத்தடை கொண்டனவாய், உடல்கள் தோறும் வெவ்வேருய், நல்வினை தீவினைகளைச் செய்து அவற்றின் பயன்களாகிய இன்ப துன்பங்களை நுகர்பவையாய், சிவமாகிய தலைவனை உடையவையாய் இருப்பவை. இதனால் தகுதி, பக்குவம் முதலியவற்ருல் வேறுபட்டு, எண்ணற்றவை அவை என்பது உணரப்பெறும்.

**ஆணவ மலம்:-**

பதிப்பொருளுக்கும் உயிர்ப் பொருளுக்கும்

யிருக்கும் பாசங்களுள், ஆணவ மலம் என்பது, உயிர்களைச் செம்பிற் களிம்பு போல, அநாதியே பற்றி நிற்பது இது பொருளால் ஒன்றேயாயினும், ஒவ்வோருயிரையும் பற்றி நிற்கின்ற எண்ணற்ற சத்திகளையுடையது. உயிர்களின் அறிவையும், தொழிலையும் மறைத்து நிற்கின்ற அடிப்படையாற்றல் இதற்குண்டு. செம்பிற் களிம்பு அநாதியே பற்றி நிற்பதென்றாலும், இரத குளிகையின் முன்னர், அக்களிம்பு நீங்கிச் செம்பு பொன்னாவது போல உயிரில் ஆணவம் அநாதியே பற்றி நிற்பதாயினும், திருவருட் சார்பின் முன்னர், அவ்வாணவம் நீங்கி, உயிர் சிவமாந்தன்மைப் பெருவாழ்வைப் பெறும். ஆணவ மலம் உயிர்களை அநாதியே பற்றி நிற்பதாதலின், இதனை மூலமலம், சகசமலம் முதலிய பெயர்களால் அழைப்பதுண்டு.

**கன்ம மலம்:-**

இரண்டாவதாகிய கன்ம மலம் உயிர்களின் விருப்பு, வெறுப்பை அடிப்படையாகக் கொண்டது அநாதி காலத்தில் ஆணவமலத்திற் கட்டுண்டிருந்த போது, உயிர்களுக்கு இருந்த விருப்பு வெறுப்பு, "மூலகன்மம்" என்று சொல்லப்பெற்றுப் பின்னர் இறைவனால் கொடுக்கப்பெற்ற தநு, கரண, புவன போகங்களில் அது தொழிற்பட, அதனால் நல்வினை

தீவினைச் செயல்களும், அவற்றின் பயனாகிய சுக, துக்க, மோகங்களும், பிறப்புக்களும் உண்டாயின உயிர்கள் மனம், மொழி, மெய் ஆகிய மூன்றினாலும் செய்த நல்வினை தீவினையாகிய இரண்டும், எடுத்த பிறப்பிலே செய்யப்பட்ட பொழுது "ஆகாமிய" மெனவும், முன்னர் எடுத்த பிறப்புக்களில் செய்யப் பட்டு, அநுபவத்துக்குரிய பக்குவம் வரும் வரையும், புத்தி தத்துவம் பற்றுக் கோடாக மாயையிலே கிடக்கும் வரை, "சஞ்சித" மெனவும், இச்சஞ்சிதத் தில் பக்குவப்பட்டு, இப்போது எடுத்திருக்கும் உடம்பையும், இதுகொண்டு அநுபவிக்க வேண்டிய இன்ப, துன்பங்களையும் தரும் போது, "பிராரத்த' மெனவும் பெயர்பெறும்.

**மாயா மலம்:-**

மூன்றாவதாகிய மாயாமலம் சுத்தமாயை, அசுத்த மாயை, பிரகிருதி மாயை என மூன்று வகைப்படும். இவற்றுள் சுத்தமும், அசுத்தமுமாகிய இருமாயைகளும் என்றும் உள்ளவை. பிரகிருதி மாயை அசுத்தமாயையில் தோன்றுவதால் அதனுள் ஒடுங்குவது, சுத்தமாயை என்றும் உள்ளதாய் அதன் எல்லையளவும் நிறைந்ததாய், உருவற்றதாய், அறி வில்லாததாய்ச் சுத்தமாகிய சொல்வடிவும், பொருள்

வடிவும் தோன்றுதற்கு முதற்காரணமாய், மயக்கம் செய்யாததாயிருக்கும். அசுத்தமாயை என்றும் உள்ளதாய், அதன் எல்லையளவும் நிறைந்ததாய்உருவற்றதாய் அறிவில்லாததாய், ஊழிக்காலத்தில் உயிர்களது கன்மங்களுக்கு உறைவிடமாய்,உயிர்களுக்குத் சுத்தா சுத்தமும் அசுத்தமுமாகிய தநு,கரண, புவன போகங்கள் தோன்றுவதற்கு முதற் காரணமாய், மயக்கம் செய்வதாய் இருக்கும்.

சுத்த மாயையில் இருந்து 5 சிவதத்துவம், 4வாக்கு, 51எழுத்து, 81பதம், 7கோடி மகாமந்திரம், 28 மூலாகமம், 207 உபாகமம், 4வேதம், 6சாத்திரம், 18புராணம், 64கலை, சிவபேதம், சத்திபேதம், நாதபேதம், பிந்து பேதம், மகேசுரபேதம், உருத்திரபேத மூர்த்திகள், ஒருமலமுடைய விஞ்ஞானகலர், இருமல முடைய பிரளயாகலர், சரியை,கிரியை யோகங்களைச் செய்து பதம் பெற்றவர்களுக்குத் தநு,கரண, புவன, போகங்கள், நிவிர்த்தி முதலிய 5கலைகள், இன்னும் பல காரியங்கள் தோன்றும்

அசுத்த மாயையிலிருந்து வித்தியாதத்துவங்கள் 7ம் திருமால், பிரமன், இந்திரன்,நவக்கிரகங்கள் இன்னும் மும்மலமுடைய சகலர்களுக்குத் தநு, கரண, புவன, போகங்களும், இன்னும் பல காரியங்களும் தோன்றும்.

அசுத்த மாயையிலிருந்து பிரகிருதிமாயை தோன்றி, பிரகிருதி புவனத்துக்குட்பட்ட சகலர்களுக்குத் தநு, கரண புவன போகங்களுக்குக் காரணமாகிய ஆன்மதத்துவங்கள் இருபத்து நான்கையும் பிறப்பிக்கும்.

**பஞ்ச கிருத்தியம் :-**

அநாதி மல முத்தராகிய பரமசிவன், ஆணவ மலத்திற் கட்டுண்டு, அறிவிச்சை செயல்கள் தடைப் படச் சடம்போற் கிடந்த உயிர்களினிடத்து வைத்த பெருங்கருணையால், அவற்றின் உய்தியொன்றையே தமது திருவுளத்தடைத்துத், தமக்கென எந்தப் பயனையும் கருதாது செய்யும் தொழில்கள் ஐந்து. இவற்றைப் "பஞ்ச கிருத்தியம்" என்று சொல்லுவோம். இவை படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்பனவாகும். "படைத்தல்" என்பது, பிறப்பையுடைய உயிர்த்தொகுதிகளின் கூட்டமாயும், போக யோகங்களுக்கு இயைந்ததாயும் இருக்கின்ற உலகத்தைப் பலவகைப்பட்ட யோனிகளிலிருந்து தோன்றச் செய்தல். "காத்தல்" என்பது, அங்ஙனம் தோற்றுவித்த எல்லா உலகங்களையும், தத்தம் விடயங்களைப் புசிக்கும்படி நிறுத்துதல். "அழித்தல்" என்பது, தோற்றுவித்த உலகங்களைத் தோன்றிய

வாறே ஒடுக்குதல். "மறைத்தல்" என்பது, தத்தம் கன்மங்களுக்கேற்பப் போக நுகர்ச்சியில் நிறுத்துதல் "அருளல்", என்பது, தீக்ஷா கிருத்தியமாகிய அநுக்கிரகம்.

**சமய வாழ்வு :-**

உயிர்கள் அவையவற்றின் கன்மங்களுக்கேற்ப நால்வகைத் தோற்றம், எழுவகைப் பிறப்பு, 84 நூறுயிரயோனி பேதங்களிற் பிறந்திறந்து உழலும். ஓரறிவுடைய தாவரப் பிறப்பிலிருந்து படிப்படியாக மேலேறி, ஆறறிவுடைய மனிதப் பிறப்பை அடைந்தவர், முதற்கண் நாத்திக வாதத்தில் அழுந்தி வாழுவர். பின்னர், தெய்வம் என்பதோர் சித்தம் உண்டாகிப், புறப்புறச் சமயங்களாகிய சமணம், பௌத்தம் முதலியவற்றிலும் புறச்சமயங்களாகிய மாயாவாதம், பாஞ்ச ராத்திரம் முதலியவற்றிலும், அகப்புறச் சமயங்களாகிய பாசுபதம், ஐக்கியவாதம் முதலியவற்றிலும், அகச் சமயங்களாகிய பாடாண வாத சைவம், சிவாத்துவித சைவம் முதலியவற்றிலும் நின்று, அவ்வச் சமயங்களில் விதித்தபடி ஒழுகுவார்கள். இவ்வெல்லாச் சமயங்களிலும் சொல்லப்படுகின்ற முதன்மையாதியவற்றை அவற்றை உடையவர்களாக அவர்களாலே குறிக்கப்பெறும்

தெய்வங்களை அதிட்டித்து நின்று, அருள் புரிபவர் சிவபெருமானேயாவார்.

புறப்புறச் சமயத்தார் வேதசிவாகமங்களை நிந்திக்கும் நாத்திகராயினும், தமக்கென நூலும், பிரமாணமும் கொண்டு, ஒரு நெறிக்கண் நிற்பவர். புறச் சமயத்தார் வேதத்தைப் பிராமணமென்று பொதுவகையாற் கொள்ளுவார்களாயினும், வேதத்தில் தத்தம் மதத்திற்குப் பொருந்துவனவற்றை மட்டும் கொண்டு, மற்றவற்றைக் கொள்ளாதவரும், வேதப் பொருள்கோளில் மாறுபாடுடையவரும், வேதப்புறமாகிய நூல்களையும் பிரமாணமாகக் கொள்ளுபவரும், சிவாகமநிந்தகரும் ஆவர். அகப்புறச் சமயத்தார் வேத சிவாகமங்களைப் பொது வகையில் பிரமாணமாகக் கொண்டாலும் சிறப்பு வகையில் அவற்றிக்குப் புறமாகிய பாசுபத முதலிய நூல்களைப் பிரமாணமாகக் கொள்ளுபவரும், வேத சிவாகமங்களில் விலக்கப்பட்டவற்றைக் கைக் கொள்ளுபவரும், ஆணவமலத்துண்மையை மறுப்பவரும் ஆவர். அகச்சமயத்தார், சித்தாந்த சைவரோடொப்பப் பொருளுண்மையை ஏற்பாராயினும், அவற்றின் தன்னியல்பு, பொதுவியல்புகளில் முரணி நிற்பர்.

உயிர்கள் புறச் சமயங்களிலும், அகச்சமயங்களிலும் நின்று செய்த புண்ணியத்தினாலே, வைதிக நெறியிலே புகுந்து, அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் ஆகிய குலங்களிலும் பிரமசரியம், கிருகத்தம், வானப்பிரத்தம், சந்நியாசம் ஆகிய ஆச்சிரமங்களிலும் விதித்த பசு புண்ணியங்களைச் செய்து, சுவர்க்கபோகம் முதலியவற்றை அநுபவித்து, நிலவுலகத்திலே பிறப்பார்கள். அவர்கள் செய்த வைதிக புண்ணிய மிகுதி, அவர்களைச் சிவாகமங்களில் உணர்த்தப் பெறும் சித்தாந்த சைவத்தைக் கடைப்பிடிக்குமாறுசெய்து சரியை, கிரியை யோகங்களாகிய உண்மைத் தவங்களில் நிற்கவைக்கும். யோகத்தின் பயனாகிய ஞானம், பரமுத்தியை நல்குவது. சைவசித்தாந்தத்திலன்றிப் " பரமுத்தி " சித்தியாது. பரமுத்திக்குச் சாதனம் சிவஞானம், சிவஞானத்தை வழங்குவன சரியை, கிரியை, யோகங்கள். சரியை என்பது சிவாலயத்துக்கும், சிவனடியார்களுக்கும், ஆசாரியருக்கும் தொண்டு செய்தல்; கிரியை என்பது சிவலிங்கப்பெருமானை அகத்தும், புறத்தும் பூசித்தல்; யோகம் என்பது மனத்தை விடயங்களின் வழியே போகா வண்ணம் நிறுத்திச், சிவத்தைத் தியானித்து, தியானிப்போனாகியதானும் தியானமும் தோன்றாது, தியானப் பொருளாகிய

சிவம் ஒன்றே விளங்கப்பெறுதல். ஞானம் என்பது பதி பசு பாசமாகிய முப்பொருள்களின் இலக்கணங்களை அறிவிக்கும் ஞான நூல்களைக் கேட்டுச், சிந்தித்துத், தெளிந்து, நிட்டை கூடல், சரியை, கிரியை, யோகம், ஞானமாகிய நான்கும் அரும்பு, மலர், காய், கனியையொப்பன.

**முத்தி வகைகள் :-**

சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்கும், முறையே ஒன்றுக்கொன்று காரணமாயிருந்து உதவுவதுடன், தனித்தனியே பயன் தருகின்ற தகுதியையும் உடையன. சரியைத் தவம் சிவலோகத்தில் வாழும் நலத்தையும், கிரியைத் தவம் சிவபெருமானுக்கு அருகில் வாழும் பேற்றையும், யோகத்தவம் சிவபெருமானது உருவத்தைப் பெறும் சிறப்பையும் நல்கும். ஞானத்தவமே ஈண்டு வாரா நெறியாகிய பேரின்பத்தை வழங்கும். சாலோக சாமீப சாரூபமாகிய மூன்றும் நிலையுதல் இல்லாததால் "பதமுத்தி" என்றும், சாயுச்சியம் நிலையுதல் உடையதால் "பரமுத்தி" என்றும் சொல்லப்பெறும்.

**முத்திக்கு வழி :-**

சரியை முதலாகிய தவநெறிகளைக் கடைப்பிடித்து ஒழுகி அழியாத பேரின்பத்தை வழங்கும்

பரமுத்தியைப் பெறும் உரிமை உயிர்களுக்கே உரியது. கடவுள் இயல்பாகவே பாசங்களின் நீங்கிய முத்தராதலால், அவருக்கு முத்திப் பேறு வேண்டுவதில்லை. மலங்கள் அறிவற்றவையாதலால் முத்தியின்பம் வேண்டப்படமாட்டாது. சத்தாகிய சிவத்துக்கும், அசத்தாகிய பாசத்துக்கும் இடைப்பட்டு, அறிவுடையனவாயிருக்கும் உயிர்கள் முத்திப் பேற்றைப் பெறுவதற்கு, ஆண்டவனுல் உணர்த்தப் பெற்றுள்ள சாதனம் ஒன்றுதான் என்பதை அனை வரும் தெரிந்து கொள்ளுதல் வேண்டும். அது "உயிர்கள் முன்னர்ச் செய்த நல்வினை வயத்தால் இதுகாறும் தமக்கு உண்ணின்று உணர்த்தி வந்த பரம்பொருளே இப்போது குரு வடிவமும் கொண்டு எழுந்தருளி வந்து சிவதீட்சை செய்து, மன்னவன் மகனுகிய நீ, ஐம்பொறிகளாகிய வேடர்களுடன் கூடி வளர்ந்து உன் பெருமை அறியாது மயங்கி இடர்ப்பட்டாய், உன் பெருமை இத்தன்மையது' என்று அறிவுறுப்ப, அறிந்தவுடன் அவ்வேடரை விட்டு நீங்கி, வேறின்றி ஒன்றும் தன்மையில் நிலை பெற்று அம்முதல்வன் திருவடிகளை அணையும்" என்பதாகும். ஞானுசாரியரை நிலைக்களமாகக் கொண்டு, சிவபெருமான் செய்தருளும் சிவதீட்சைப் பேறு ஒன்றே பாசநீக்கம் செய்து சிவப்பேற்றை

வழங்குவதாகும். வேறு எந்த முயற்சியாலும் இந்த நற்பேற்றைப் பெறமுடியாது.

**நல்வினை இரண்டு வகை :-**

புண்ணியங்கள் உயிர்களை நோக்கிச் செய்யப்படுவனவும், சிவனையே நோக்கிச் செய்யப் படுவனவுமென இருவகைப்பட்டு, முன்னையது பசுபுண்ணியமெனவும், பின்னையது சிவபுண்ணிய மெனவும் பெயர் பெறும். பசு புண்ணியப் பலன் களனைத்தும் அழிவெய்தும் தன்மையுடையன. அழி வின்றி நிலைபேறுடையதாகிய ஞானத்தை, அப்பசு புண்ணியங்களால் பெற முடியாது. பொருளை அடிப் படையாகக் கொண்டு பசுபுண்ணியமும், தவத்தை அடிப்படையாகக் கொண்டு சிவபுண்ணியமும் நிகழும் என்பதும் ஒன்று, சிவபுண்ணியமும் அபுத்தி பூர்வம், புத்தி பூர்வம் என இருவகைப்பட்டு அபுத்தி பூர்வம்சிவபெருமானைப் பொது நீக்கி அறியுமாறின் றிச் செய்வதும், செய்த செயல் யாதானுமோராற் றால் சிவபெருமானுக்கு உரிய பணியாக முடிவதும் என இருவகைப்படும். புத்தி பூர்வம் பொது, சிறப்பு என்று இரு வகைப்பட்டுப் பொது, சிவபுண்ணியத் திற்கு அங்கமாகிய சிவ தீட்சையின்றிச் செய்வதும் சிறப்பு சிவதீட்சை பெற்றுச் செய்வதுமென இரு வகைப்படும். இவ்விரண்டும் சிவபெருமானிடத்து

வைத்த பத்தி காரணமாக உண்மையால் செய்வதும், புகழ் முதலிய உலகப் பயனை நோக்கிச் செய்வது மென மேலும் இரு வகைப்படும். சிவபுண்ணியம், அதற்கு அங்கமாகிய சிவ தீட்சையைப் பெற்றுச் சிவபெருமானிடத்து வைத்த பத்தி காரணமாக உண்மையால் நிகழ்த்தப் பெறல் வேண்டும்.

**சிவ தீட்சை முறை:-**

உயிர்கள் மலச்சேர்க்கை அடிப்படையில் மூவகைப் படுவன. ஆணவ மலமொன்றே யுடைய வர் விஞ்ஞானகலர். அதனுடன் கன்ம மலமுமுடைய வர் பிரளயாகலர், அவற்றுடன் மாயா மலமுமுடைய வர் சகலர். விஞ்ஞான கலருக்கு உயிர்க்குயிராயிருக்கின்ற நிலையில் உண்ணின்று தன்மையில் உணர்த்தி யும், பிரளயாகலருக்கு நாற்றோளும் முக்கண்ணும் கறைமிடறும் கொண்ட வடிவத்தையே குருவடி வாகக் காட்டி, முன்னிலையில் உணர்த்தியும், சகலர்க்கு அவர் வடிவு போலும் குருவடிவாய் மானுடப் போர்வையின் மறைந்து நின்று உபதேச முகத்தால் படர்க்கையில் உணர்த்தியும் சிவ பெருமான் உயிர்களை ஆட்கொள்ளுவார்.

**சிவ தீட்சை வகை:-**

வேதம் ஓதுவதிலும், வைதிக ஒழுக்கத்தை மேற்

பார்ப்பன மரபிற் பிறந்தமை காரணமாக மட்டும் அதிகாரம் வருவதில்லை. அதுபோலச் சைவாகமங்களை ஓதுவதிலும், சைவ ஒழுக்கத்தை மேற்கொள்ளுவதிலும் சிவ தீட்சைப் பேறுடையார்க்கன்றிச் சைவ மரபிற் பிறந்தமையால் மட்டும் அதிகாரம் வரமாட்டாது. சிவ தீட்சை சமயதீக்ஷை, விசேட தீக்ஷை நிருவாண தீக்ஷை என மூவகைப்படும். சமயதீக்ஷை ஏழாம் வயசிலும், விசேடதீக்ஷை பத்தொன்பதாம் வயசுக்கு முன்னரும், நிருவாணதீக்ஷை முப்பத்தொராம் வயசுக்கு முன்னரும் பெற வேண்டுவனவாகும். சமயதீட்சையில் விதிப்படி மண்டலபூசை முதலியவற்றைச் செய்து சீடனை வழிபடுவித்துச், சம்பாத ஓமத்தால் சுத்திப் படுத்தி, ஆசாரியர் சீடனைச் சைவாசாரத்துக்கு அதிகாரியாக்குவார். விசேட தீக்ஷையில், வேள்விக் குண்டத்தில் வாகீசுவரி வாகீசுவரர்களை ஆவாகனம் செய்து, சீடனுடைய ஆன்மாவை வாங்கி வாகீசுவரரிடம் சேர்த்து, அவரால் வாகீசுவரியின் கருப்பநாடியில் செலுத்துவித்துக் கருப்பாதான முதலிய கிரியைகளின் பொருட்டு உரிய ஆகுதிகளைச் செய்து, கரு முதிர்ந்து பிறந்ததாகப் பாவித்துக், குண்டத்தினின்றும் ஆன்மாவை மீள வாங்கிச், சீடனது இதயத் தானத்தில் நிறுத்திச் சிவபுத்திரனுகச் செய்து, சிவபூசை முதலியவற்றிற்கும் சிவாகமங்களை ஓதுவதற்கும்

அதிகாரியாக்குவார். நிருவாண தீக்ஷையில் உயிர்கள் செய்யும் கன்மங்கட்கு இடமாகிய மந்திரம், பதம், வன்னம், புவனம், தத்துவம், கலை ஆகிய அறுவகை அத்துவாக்களின் தன்மைகளையும் அவைகள் ஒன்றினொன்று அடங்கும் முறைமையையும் அறிந்து அடக்கி நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி சாந்தியதீதை ஆகிய ஐந்துகலைகளையும் சோதித்து, அவற்றில் நீங்கிய சீடனது ஆன்மாவை வாங்கிப் பரமசிவனிடத்தில் ஒடுக்கி அங்ஙனம் ஒடுங்கிய வழி,மாணிக்கத்தைச் சார்ந்த படிகவொளி போலத் தற்போதம் ஒடுங்கிச் சிவானந்தம் மேவிடும் படி, மலத்தை நீக்கி உண்மை ஞானம் விளங்கச் செய்து சிவாகமங்களின் உண்மைப் பொருளை ஆராய்வதற்கு அதிகாரியாக்குவார். அவ்வாராய்ச்சியால் சிவஞானம் விளங்கிச் சிவம் பிரகாசிக்கப் பெற்றுமலவாசனையற்றுச்சீடன் வீடுபேறடைவான்.

**நிருவாண தீக்ஷையின் பயன்:-**

ஒளியானன்றி இருள் நீங்காதவாறு போலச், சிவஞானத்தாலன்றி ஆணவமலம் நீங்காது. நிருவாண தீக்ஷையில் நிகழ்ந்த அத்துவ சுத்தி,நிரம்பிக் கிடந்த சஞ்சித கன்மத்தை நீக்கும். பிராரத்த கன்மம் ''உடம்புடன் ஒழியும். ஆகாமிய கன்மம்'' யான் செய்தேன் பிறர் செய்தார் என்னது யான் என்னும் இக்

வே நின்றிட," வந்து பொருந்தாது. இங்ஙனமாகிய வினை நீக்கம் இருவினை ஒப்பை உண்டாக்க, அது மலபரிபாகத்தைச் செய்ய, அதனால் சத்திநிபாதமும், சிவப்பேறும் நிகழும்.

**சிவதீட்சைக் கிரியை:**

சிவதீட்சைக் கிரியை ஞானவதி, கிரியாவதி என இரண்டு வகைப்படும். ஞானவதியில் குண்டம் மண்டலம், அக்கினி, சுருக்கு, சுருவம் முதலியவற்றை அகத்தேயிட்டு விதிப்படி பூசை ஆகுதி முதலியவைகளைச் செய்வார்கள். கிரியாவதியில் அவற்றைப் புறத்தேயிட்டு விதிப்படி பூசை ஆகுதி முதலியவற்றைச் செய்வார்கள். இவ்விருவகைத் தீக்ஷைகளும் பொதுவாக "ஔத்திரி தீக்ஷை" என்று சொல்லப் பெறும். ஔத்திரி என்பது "அக்கினி காரியத்துடன்" என்னும் பொருளை உடையது. அந்தணர், அரசர், வணிகர், வேளாளர், அந்தணருக்கு மற்றை மூவருணத்துப் பெண்களிடத்தும் பிறந்த மூவர், அரசருக்கு மற்றை இரண்டு வருணத்துப் பெண்களிடத்தும் பிறந்த இருவர், வணிகருக்கு வேளாள வருணப் பெண்களிடத்துப் பிறந்த ஒருவர் ஆகிய பதின்மரும் ஔத்திரி தீக்ஷை பெறுவதற்கு உரிமையுடையவர்கள். மற்றையோர் ஔத்திரி தீக்ஷைக்கு அங்கமாகிய நயன தீக்ஷை, பரிச தீக்ஷை, வாசக தீக்ஷை, மானச

தீக்ஷை, சாத்திர தீக்ஷை, யோக தீக்ஷை என்னும் ஆறனுள் பக்குவத்துக் கேற்றவற்றைப் பெறுதற் குரியர்.

**உண்மைச் சைவர்கள்:-**

சிவ தீட்சை பெற்றுச் சிவபெருமானை வழிபடு பவர்களே உண்மையான சைவர்களாவார்கள். அநாதி சைவராகிய சிவபெருமான் ஈசானம், தத்புரு டம், அகோரம், வாமதேவம், சத்தியோசாதம் என் னும் தமது ஐந்து திருமுகங்களாலும் ஆதியில் தீக்ஷிக்கப் பெற்ற கௌசிகர், காசியபர், பாரத்து வாசர், கௌதமர் அகத்தியர் ஆகிய ஐந்து முனிவர் களின் வழியில் வந்து சமய விசேட நிருவாண தீக்ஷைகளையும், ஆசாரியபிஷேகத்தையும் பெற்று, ஆன்மார்த்த பரார்த்த பூசைகளைச் செய்பவர் ஆதி சைவர். அந்தண குலத்தில் சிவதீக்ஷை பெற்றவர் மகாசைவர். அரசகுலம் வணிக குலங்களில் சிவ தீக்ஷை பெற்றவர் அநுசைவர், வேளாள குலத்தில் சிவதீக்ஷை பெற்றவர் அவாந்தர சைவர், சிவ தீக்ஷை பெற்ற அநுலோமர் பிரவர சைவர். சிவ தீக்ஷை பெற்ற பிரதிலோமர் முதலியோர் அந்திய சைவர். பிரதிலோமர் என்பவர் உயர்குலப் பெண் ணிற்குத் தாழ்ந்த குல ஆடவர் வழியாகப்பிறந்தவர்

**உணவுச் சைவர்கள்:-**

சைவ சமயத்தினரின் உலகியல் ஒழுக்கத்தில் தலை சிறந்தது புலாலுண்ணுமை, இதனை ஊன் நீக்கி உண்பவனைச் சைவன் என்றும், ஊனுடன் உண்பவனை "அசைவன்" என்றும் தொன்று தொட்டு உலகம் கூறுவதால் அறியலாம். உணவுச் சைவர்களில், உண்மைச் சைவர்கள் மட்டுமின்றி, மற்றைச் சமயவாதிகளும், வேறு நாட்டவர்களும், சமயப் பகைவர்களும் கூட இருப்பார்கள். ஆகவே இவர்களைச் சைவர்களென்று சொல்லுவது எள்ளளவும் ஏற்றுக்கொள்ள முடியாதது.

**பிறவிச் சைவர்கள்:-**

பிறப்பால் சைவர்களென்று தங்களைப் பெரிது படுத்திக் கொள்ளுகிறவர்களும் நம் நாட்டில் இருக்கிருர்கள். பிறப்பு மட்டும் ஒருவனுக்குப் பெருமை சிறுமையைக் கொடுப்பதில்லை யென்பது அறிஞர்களால் ஒப்பமுடிந்தது. சமயதீக்ஷை கூடப்பெருமல் சைவச் சாதியினர் என்று தங்களைப் பிதற்றுவோர் எப்படிச் சைவராவார்?

**முடிவுரை:-**

ஒருவர் சிவபெருமானுல் ஆதியில் தீக்ஷிக்கப் பெற்ற ஆதிசைவ மரபில் வந்தவராயினும், முறையாகச் சிவதீக்ஷையைப் பெருதபொழுது அவர்

சைவக் கிரியை எதனையும் செய்தற்குரிய அதிகாரம் உடையவரல்லர், அங்ஙனமாகவும் மற்றையோர் சிவதீக்ஷை பெருமல், தங்களைச் சைவர்கள் என்று தம்பட்டம் அடித்துக் கொள்வது போலியாகவே முடியுமென்பதை எல்லோரும் உணர வேண்டும். மேலும், "ஆதிசைவர் முதலிய யாராயிருந்தாலும், சிவதீக்ஷை பெற்றே, சைவக் கிரியைகளில் ஒழுக வேண்டும்" என்னும் நியதியிருப்பதாலும், தீக்ஷை பெற்ற பிறகு பெற்ற தீக்ஷைக்கேற்ப அநுட்டான செபம், ஆன்மார்த்த பூசை அக்கினி காரியம் ஆகிய வற்றை வழுவறச் செய்து வருபவரே தீக்ஷைப் பயனைப் பெறுவராதலாலும், தீக்ஷையோ, தீக்ஷைக் குரிய அநுட்டானமோ இல்லாதவரைச்சைவரல்லர். சாதாரண மனிதர் என்று கொள்ளுதல் தான் முறை யாகும். இந்நாளில் எல்லா மரபினரிலும் தீக்ஷை பெருத பலரிருப்பது ஒருபுறமிருக்கப் பெற்றவர்களிற் பலர், தமக்குரிய நெறிமுறைகளைக் கடைப் பிடிக்கா மல், தம்மைத்தாமே உயர்த்திப் பேசி ஒழுகுவது பெரிதும் வருந்துதற்குரியது. இத்தகைய நடை முறைக் கேடுகள் திருவருளால் நீங்க வேண்டும். அநாதி காலம் தொட்டுப் பிறப்பிறப்புத் துன்பங் களில் அலமந்து, ஈடேற வழியறியாமல் அல்லலுறு கின்ற மக்களுக்குச், சிவதீட்சையொன்றே, அத் துன்பங்களிலிருந்து விடுதலையாக்கி, அழியாத பேரின்பத்தை வழங்குமென்பதைச் சிந்தித்துணர்ந்து எல்லோரும் சிவ தீக்ஷா வான்களாகத் திகழத் திருவருள் துணை செய்வதாக.

நலமே தழைக